# நல்ல நல்ல
# கதைப் பாடல்கள்

எஸ். நவராஜ் செல்லையா
M.A.D.P.E.,M.P.Ed.



# நல்ல நல்ல
# கதைப் பாடல்கள்

எஸ். நவராஜ் செல்லையா
M.A., D.P.E., M.P.E.D.



# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | — | NALLA NALLA KATHAI PADALKAL |
| Author | — | S. Navaraj Chelliah |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | 10, November, 1981 |
| Copy right | — | S. Navaraj Chelliah |
| Paper Used | — | White Printing 10.9 Kg. |
| Size of the Book | — | 17.5 × 12 c.m. |

---

| | | |
|---|---|---|
| PRICE | — | Rs. 3-00 |

---

| | | |
|---|---|---|
| Printing Type Used | — | 14 Point |
| No: of Pages | — | 64 |
| No: of Copies | — | 1200 |
| Printer | — | Grace Printers<br>59, Lake view Road,<br>West Mambalam, Ms.33 |
| Publisher | — | Santhimalar Pathippagam<br>46, Ranganathan Street,<br>Madras.17 |
| Subject | — | Stories and<br>Poems for Children |

# முன்னுரை.

தமிழின் இனிமை அதன் எதுகை, மோனை, சந்தம் இவற்றில் தான் நிறைய நிரம்பிக் கிடக்கிறது.

குழந்தைகள் அதன் இனிமையில் ஈடு பாடு கொண்டு விட்டால், தமிழ் மேல் மாளா அன்பும் மாரு உறவும் கொண்டு விடுவார்கள்.

அந்த உறவினை கதை மூலம் தந்தால், எளிமை யாகவே ஏற்றுக் கொள்ளச் செய்து விடலாம் என்ற நம்பிக்கையில் தான், கதைகளை பாடல்களாக்கித் தந்திருக்கிறேன்.

படிக்கும் பொழுதே புரிந்து கொள்ளக் கூடிய வகையிலே பாடல்கள் எளிமையான சொற்களால் ஆக்கப் பட்டிருக்கின்றன.

பள்ளிக் குழந்தைகளே பாடி நடித்த இரண்டு நாட்டிய நாடகங்களும் இதில் இடம் பெற்றுள்ளன.

படிப்பதற்கு சுவையானது போலவே, நடிப் பதற்கும் ஏற்றவாறு எழுதப் பெற்ற இப்பாடல்கள், பள்ளிகளுக்கும் மட்டுமல்ல, வளரும் இளைஞர் களுக்கும் உதவும் என்று நம்பியே உங்கள் கைகளில் தந்திருக்கிறோம்.

வளமான உடல் பெற எனது விளையாட்டுத் துறை நூல்கள் உதவுவது போல, நலமான மனம் பெற இக்கதைப் பாடல்கள் உதவும் என்று அளித் திருக்கிறேன்.

ஆதரவு அளித்து வரும் அன்பர்கள் அனைவருக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஞானமலர் இல்லம்
சென்னை - 17

எஸ். நவராஜ் செல்லையா.
10 - 11 - 81

# பொருளடக்கம்

# 1

## ஓட்டைப் பல் சங்கரன்

மங்கலம் என்றொரு ஊரினிலே
மாலதி என்பாள் தாயொருத்தி!
சங்கரன் எனும்தன் மகனுடனே
சாந்தி இன்றியே வாழ்ந்து வந்தாள்!

கணவனை இழந்தவள் என்றாலும்
கடமையில் வல்லவள் எந்நாளும்!
கணமும் உழைத்தே வாழ்ந் திருந்தாள்
கண்போல் மகனைக் காத்து வந்தாள்!

யாருக்கும் அடங்காப் பையனவன்
என்றும் கல்லெறிக் கையனவன்
ஊரும் அறியும் பொய்யனவன்
உண்மையைச் சொல்லா மெய்யனவன்!

குழந்தையைக் கண்டால் கிள்ளிடுவான்
குழப்பம் செய்தே துள்ளிடுவான்
அழுவதைக் கேட்டால் பாடிடுவான்
அடித்திட வந்தால் ஓடிடுவான்!

தெருவில் திரிவான் நாய்போலே!
தீங்குகள் புரிவான் பேய்போலே!
விரைவாய் நடப்பான் புயல்போலே!
வீதியில் மறைவான் முயல்போலே!

அன்புத் தாயையும் அறைந்திடுவான்
அறிவுரை சொன்னல் மறந்திடுவான்
இன்பத் தமிழையும் பழித்திடுவான்
ஏடுகள் தந்தால் கிழித்திடுவான்!

குறும்புகள் அவனுக்கு விளையாட்டு.
குதர்க்கப் பேச்சுகள் இசைப்பாட்டு
எறும்பாய் கடிப்பதில் சுறுசுறுப்பு
கரும்பாம் படிப்பெனில் பெரும்வெறுப்பு!

இப்படி சங்கரன் வாழ்ந்திருந்தான்
இன்பம் இதுஎன நினைத்திருந்தான்.
தப்பும் தவறும் செய்துவந்தான்
தண்டனை இன்றி மகிழ்ந்திருந்தான்!

எத்தனை எத்தனைக் குறும்புகளை
எப்படிச் செய்தே தப்பியவன்
புத்திமான் என்று காட்டிக்கொண்டான்
போனான் வம்பில் மாட்டிக்கொண்டான்!

குதித்துக் குதித்தே நடந்துவந்த
குதிரை பூட்டிய வண்டியொன்று
புதிதாய் வந்தது வீதியிலே!
பூப்போல் நின்றது பாதையிலே!

கூட்டம் வந்தது பார்த்திடவே!
கூச்சலைப் போட்டது மிரண்டிடவே!
ஆட்டம் போட்டான் சங்கரனும்!
அதட்டிப் பேசினான் வந்தவனும்!

'முன்னால் போனால் கடித்துவிடும்
மீறியே வந்தால் மிதித்துவிடும்!
பின்னால் சென்றால் உதைத்துவிடும்
பக்கம் வந்தால் பாய்ந்துவிடும்!

பேசாமல் நீர் போய்விடுங்கள்!
பேச்சைக் கேட்டே விலகிடுங்கள்!
நாசம் செய்யும் என் குதிரை
நஷ்டம் அடைந்தவர் பலபேர்கள்!

சண்டிக் குதிரை என் குதிரை!'
வண்டிக்காரன் எச்சரித்தான்.
கிண்டல் அல்ல எனச் சொல்லி
கிளப்பிச் சென்றான் ஓட்டலுக்கே!

சண்டிக் குதிரை முகரையைப்பார்!
சாகப் போகும் கழுதைக்குநேர்!
நொண்டி என்றான் சங்கரனும்
நொடியில் பின்னல் போனனே!

வாலை இழுத்தான் வெடுக்கென்று!
வந்தது துன்பம் தனக்கென்று
காலை இழுத்தது படக்கென்று!
கன்னத்தில் விழுந்தது உதையொன்று!

உதையால் கன்னம் வீங்கியதே!
உதிரம் வாயினில் ஓடியதே!
பதைத்தே சங்கரன் துப்புகின்றான்
பற்கள் இரண்டு விழுந்தனவே!

பக்கம் நின்ற மக்களெல்லாம்.
பார்த்தே கைதட்டி சிரித்தனரே!
வெட்கம் அடைந்த சங்கரனும்
வீட்டை நோக்கிப் பறந்தானே

நாட்கள் நகர்ந்தன விரைவாக
வீட்டில் கிடந்தான் துயராக!
ஓட்டைப் பற்களைப் பார்த்துவிட்டே
உள்ளம் கலங்கியே அழுதானே!

சங்கரன் ஓட்டைப் பல்லன்என
சங்கதி அறிந்தோர் சிரித்தாரே!
பொங்கும் கோபம் கொதித்திடவே
பேசினான் தாயிடம் சங்கரனும்!

குனிந்தேன் தொட்டேன் தவறில்லை!
குதிரை உதைத்தது தவறென்றான்.
இனிநான் வீதியில் செல்வதற்கே
இரண்டு பல்லையும் கட்டென்றான்!

மகனின் வேதனை தாளாமல்
மாலதி பிறரிடம் கடன்வாங்கி,
தகதக என்று தங்கத்திலே
தங்கத் தால் பல் கட்டுவித்தாள்!

கிழவன் குமரன் ஆகிவிட்டால்
கீழும் மேலும் குதிப்பதுபோல்
கழன்றஎன் பற்கள் வந்ததெனக்
கத்தியே நடந்தான் வீதியிலே!

பல்லைக் காட்டிப் பெருமைபெற
பார்த்தான் வழிகள் பல எண்ணி!
எல்லை இல்லா மகிழ்ச்சியிலே
இஞ்சியைக் கேட்க முடிவு செய்தான்!

நடைநடை யாக நடந்து சென்றான்
நகைப்பான் முன்பல் காட்டிடுவான்!
கடைகடை யாக ஏறிடு வான்
கேட்பான் இஞ்சி இருக்கிறதா?

ஈயென இளிப்பான் இஞ்சியென்பான்
இதுதான் தங்கப் பல்என்பான்.
ஏய்என பல்லைக் காட்டிவிட்டு
இறங்கி ஓடுவான் சீண்டிவிட்டு!

ஒருசிலர் சொல்வார் இல்லையென்று,
ஒருசிலர் சொல்வார் தொல்லையென்று!
மறுசிலர் உடைப்பேன் பல்லையென்று!
மனதுக்குள் திட்டுவான் சனியென்று!

மாலை வந்தால் சங்கரனும்
மாப்பிள்ளை போலே நடந்தவனும்,
வேலை இருப்பது போல் சென்று
வேடிக்கை செய்வது வாடிக்கையாம்!

மிஞ்சிப் போனது வேடிக்கையும்.
மீறிப்போனதே வேதனையும்.
இஞ்சியைக் கேட்பதும் போகவில்லை,
இதற்கொரு முடிவும் ஆகவில்லை!

பொறுமை இழந்த ஓர் கடைக்காரன்
பொறுத்திருந் தான்ஓர் நாள்பார்த்து!
எருமை அசைவது போல் நடந்து
ஏறியே வந்தான் சங்கரனும்.

இஞ்சி கேட்கிறேன் இருக்கிறதா?
இளித்தே இல்லை என்கின்றீர்!
இஞ்சியை தின்ற குரங்கதுபோல்
இருக்கும் உன் முகம் சகிக்கலையே!

சங்கரன் சொன்னான் இதுபோலே!
சாந்தம் இழந்தான் கடை ஆளே!
அங்கம் துடித்தான் எழுந்தானே!
அறைந்தான் சங்கரன் விழுந்தானே!

இடியென விழுந்தது பல அடிகள்
இடறியே விழுந்தான் கடைப்படியில்!
அடிக்குப் பயந்தே ஓடிவிட்டான்!
அப்புறம் பார்த்தான் அழுதுவிட்டான்!

இஞ்சிதான் கேட்டேன்! ஏன் அடித்தான்!
இரண்டு பற்களைக் காணுமே!
கொஞ்சும் தங்கப் பல்போனால்
கோபமாய் தாயும் அடிப்பாளே!

இப்படி நடந்தால் துன்பம் வரும்.
எங்கும் எதிலும் வம்புவரும்
தப்பாய் நடப்பதைத் தவிர்த்திடுவேன்!
தாய்க்குநல் மகனாய் வாழ்ந்திடுவேன்!

இரும்பவும் குறும்பு நான் செய்தால்
திருட்டும் புரட்டும் சேர்ந்துவிடும்!
குறும்புக்கு என்றும் அளவுண்டு.
குடும்பம் காப்பதே என்தொண்டு.

அடுத்தவர் அழுதால் நான் அழுவேன்!
அவர்க்கொரு துணையாய் உதவிடுவேன்!
நடத்தையில் நல்லவன் புகழ் அடைவேன்!
நாளும் ஆனந்தம் அடைந்திடுவேன்.

ஓட்டைப் பல்லன் சங்கரனும்
உண்மையை உணர்ந்து திருந்தினனே!
நாட்டில் ஒழுங்காய் வாழ்ந்தானே!
நன்மைகள் பலவும் அடைந்தானே!

# 2

## குறும்புக்காரன்

அவனோ சிறுவன் ஆளில் அழகன்.
தவளை போலவே தாவிடும் கலைஞன்.

காலையில் எழுந்தால் கண்ணைக் கசக்கி
சோலையில் சென்றே சோம்பல் முறிப்பான்.

மரத்தில் பழங்கள் இருந்தால் அவற்றைக்
கரத்தில் பெறும்வரை அமைதியும் கொள்ளான்.

பேச்சில் துடிப்பும் செயலில் நடிப்பும்
கூச்சம் இல்லாமல் செய்வதில் கொம்பன்.

கரும்பைத் தின்பது போலவே தினமும்
குறும்புசெய்வதைக் கொள்கையாய் உடையவன்

வம்பும் சண்டையும் அவன் இரு கண்கள்.
கம்பும் கையுமே அவன் தரும் காட்சி

அவனது தந்தையோ கிழவர்; என்றும்
சிவனே என்று சாய்ந்தே கிடப்பவர்.

ஒருநாள் மாலையில் ஊரில் நடந்த
திருநாள் பார்க்கத் திடமாய் சென்றவர்,

வழியில் வாழைப் பழத்தோல் வழுக்கி
விழுந்தார்! எலும்பும் முறிந்தே கிடந்தார்!

அக்கம் பக்கம் உள்ளவர் அவரை
பக்குவ மாகப் பார்த்தே தூக்கி

வீட்டில் சேர்த்தனர். வைத்தியம் செய்ய
நாட்டு வைத்தியர் வேண்டும் என்பதால்,

மகனைப் பார்த்தார்! அருகில் அழைத்தார்.
முகத்தில் வேதனைத் துடித்திட கனைத்தார்!

உதவிக்கு யாரும் ஊரில் இல்லை!
மெதுவாய் மகனிடம் சேதியைச் சொன்னார்

வேலை இல்லாத கந்தனும் தந்தை
அவலக் குரலால் அருகே நின்றான்

ஆற்றில் வெள்ளம் அலைபுரண் டோடுதாம்!
ஏற்றிச் செல்ல படகுகள் இருக்கும்.

அக்கரை செல்வாய்! ஆற்றின் கரையில்
மக்களைக் கேட்டால் வீட்டைக் காட்டுவார்

மந்தித் தோப்பு மணிக்கட்டு சுவாமிகள்
குந்திதான் இருப்பார்! பயந்து விடாதே!

சிப்பாய் சண்முகம் என்றே சொன்னால்
அப்புறம் பாரேன் எந்தன் பெருமையை!

உடலில் வலியோ உயிரை எடுக்குது
உடனே ஓடி அழைத்தே வருவாய்!'

கண்ணீர் வடிக்கும் தந்தையைக் கண்டு
கண்ணீர் விட்டான் கந்தனும் கூடவே!

'அழைத்தே வருகிறேன்! அழாதே அப்பா!
பிழைக்க வைக்கிறேன் பிடித்தே வருகிறேன்!

சத்தமாய் கூறினான் சபதம் போலவே!
ரத்த பாசம்தான்! யாரே மறுப்பார்!

வேகமாய் நடந்தான்! வைத்தியர் நினைவில்
சோகமாய் இருந்தவன் சுறுசுறுப் படைந்தான்.

ஆற்றில் வெள்ளம் கரைபுரண் டோடிட,
காற்றில் பட்டமாய் அலைகள் புரண்டன.

கண்டான் கந்தனும். கலங்கித் தவித்தான்.
உண்டோ வழியும் அக்கரை அடைய

என்றே முயன்றான். ஏங்கியே நின்றான்.
நின்றான் நின்றான்! நேரமோ பறந்தது.

ஆற்றங் கரையினில் படகோ ஒன்று
பார்த்தான் கந்தன் பாய்ந்தே சென்றான்

ஆண்கள் பெண்கள் கிழவர் சிறுவர்
ஆங்கே இருந்தனர் படகினில் ஏற.

படகுக் காரனும் உள்ளே நின்றான்.
படபட வென்றே பதறியே கந்தனும்

எனக்கொரு இடம்தா! அவசரம் அவசரம்!
அனுமதி யின்றியே உள்ளே நுழைந்தான்.

உனக்கா வேண்டும் உட்கார இடமா!
குணமிலா குறும்பன் குரங்குப் பையன்

பொல்லா சேட்டைகள் செய்திடும் போக்கிரி!
தொல்லை கொடுப்பதில் துச்சா தனன்நீ!

போடா போஎன விரட்டினர் கந்தனை
வாடிய முகத்துடன் கந்தனும் கெஞ்சினான்!

குரங்கை மடியில் குந்தவே வைத்துக்
குரங்கென இருக்குமோர் கிழவன் கூறினான்.

ஐயோ பாவம்! அவசரம் என்கிறான்!
பொய்யே யில்லை வைத்தியர் தம்மை

அழைக்கப் போகிறான். அழைத்து வந்தால்
பிழைப்பார் அவனது தந்தையும் நிஜமே!

என்றோ செய்த குறும்புகள் தன்னை
இன்று தடுப்பதை கந்தனும் உணர்ந்தான்.

சத்தியம் செய்தான்! ஒழுங்காய் இருக்கிறேன்
புத்தியும் வந்தது போலவன் கெஞ்சினான்.

சுவர்போல் நின்றான். புழுபோல் நெளிந்தான்
தவறுகள் நினைத்தே தயங்கியே நின்றான்.

படகில் இருந்த அனைவரும் எதிர்த்தனர்
படகில் ஏற்றவே மறுத்தனர் வெறுத்தனர்

விளையாடிடவே இதுவா நேரம்?
வீட்டுக்குப் போகணும்! படகை ஓட்டுவீர்!

சீறினார் ஒருவர்! சேர்ந்தே பலரும்
மாறி மாறியே கட்டளை போட்டனர்,

பாவம் பார்ப்போம்! பெரியவர் வீட்டில்
ஆவலாய் இருப்பார் வைத்தியம் செய்ய!

முடிவுக்கு வருவோம். என்றே பேசி
நடைமுறை விதியென ஒன்றைக் கூறினர்.

"இவன் இரு கால்கள் கைகளைக் கட்டி
எவரும் அருகில் இல்லாத இடத்தில்

போட்டே வைப்போம். அக்கரை போனதும்
மூட்டையை அவிழ்ப்பது போல்விடு விப்போம்"

ஆகா அழகு! யோசனை அருமையே!
ஏக மனதாய் யாவரும் ஒப்பினர்.

மூட்டை போலவே கந்தனைக் கட்டி
போட்டனர் படகில்; மூலையில் கிடத்தினர்.

என்றோ செய்த குறும்புகள் தன்னை
இன்று கெடுப்பதை கந்தனும் உணர்ந்தான்.

சின்னக் குழந்தை நடப்பது போலவே
தண்ணீரில் படகு தத்திச் சென்றது.

அலைகளை எதிர்த்துத் துடுப்பும் போடவே
நிலையாய் சென்றது நிம்மதி யாகவே!

மூலையில் கிடந்தான் மூட்டையாய் கந்தன்.
மூளையோ அவனுள் அரிப்பாய் அரித்தது.

ஒவ்வொரு முகமாய் உற்றுப் பார்த்தான்.
பவ்விய மாகவே பார்த்தே ரசித்தான்.

அப்படி பார்த்த உருவங்கள் தனில்
தப்பித மாகப் பட்டது குரங்கு

பல்லைக் காட்டிப் பசப்புச் சிரிப்பு.
மெல்லவே இளித்து மேனியை சொரிந்து

அங்கும் இங்கும் ஆடிக் குதிக்கும்
அங்கம் குலுக்கும் குரங்கின் சேட்டை

கண்களை உறுத்தின. கருத்தினை இழுத்தது.
எண்ணம் மாறிட கந்தன் யோசித்தான்.

அந்தக் குரங்கை அன்பாய் தொட்டால்
பந்தாய் குதிக்கும் பார்த்தே மகிழலாம்.

ரகசிய மாகவே நினைத்துப் பார்த்தான்.
முகமோ மலர்ந்தது முடிவும் வந்தது.

நேரம் பார்த்து நிலையைப் பார்த்து
யாரும் தன்னைக் காணாத பொழுது

விளக்கு மாற்றுக் குச்சியில் ஒன்றை
கலக்கம் இன்றியே கையில் எடுத்தான்.

"திருமண வீட்டில் தேம்பியே அழுபவள்
இறந்தவர் வீட்டில் எப்படி அழுவாள்"

என்பது பழமொழி. இம்மொழி போலவே
தன்மேல் பட்ட குச்சியைக் கண்டதும்,

சும்மா குதிக்கும் 'தைதை' குரங்கும்
எம்பிக் குதித்தது ... அலறித் தொலைத்தது.

கூவிக் கூவிக் குதித்தது மேலே
தாவித் தாவி தவித்தது ஆங்கே!

ஒருமுறை பெண்கள் மேலே குதிக்கவே
சிரித்த பெண்களும் திகைத்தே எழுந்தனர்!

ஆண்கள் மேலே அலறி விழுந்தனர்.
ஆண்களும் அவர்களைத் தாங்கிக் கொண்டனர்.

இருந்தவர் அனைவரும் ஒருபுறம் சாயவே
ஒருபுறம் உயர்ந்தது மறுபுறம் தாழ்ந்தது.

அலைமேல் அழகாய் மிதந்தஅப் படகும்
நிலைகொள் ளாமல் குப்புறக் கவிழ்ந்தது.

நீந்தத் தெரிந்தவர் நீந்திச் சென்றனர்
நீந்த முடியாதோர் நீரில் மூழ்கினர்.

நீந்தத் தெரிந்த கந்தனும் முடிவில்
நீந்த முடியாமல் நீரில் மூழ்கினன்.

எத்தனை முயற்சிகள் எடுத்தும் சிலரே
பத்திர மாகவே பிழைக்க முடிந்தது.

குறும்புகள் செய்து களிப்பினை அடைந்த
குறும்பன் கந்தன் குறும்பால் அழிந்தான்.

தந்தையைக் காக்க பயணம் செய்தவன்
கந்தன் பயணமே கடைசியாய் ஆனது,

சனிபோல் வந்தஓர் அற்ப ஆசையும்
வினையாய் முடிந்தது வீண்விளை யாட்டால்!

சிறுவர் யாவரும் சந்தோஷம் பெற
குறும்புகள் செய்யலாம்! தவ்றே இல்லை.

காலம் அறிந்தே கருத்தினை உணர்ந்தே
சீலமாய்ச் செய்தால் சிறப்பும் பெறலாம்.

குறும்புகள் தம்மை செய்யும் இடமும்,
குறும்புகள் தம்மை செய்யும் காலமும்,

அறிந்தே செய்தால் ஆனந்தம் வரும்!
புரிந்தே செய்தால் புகழும் வருமே!

பிறர்மனம் நோகும் குறும்புகள் புரியும்
குறைமதி தன்னைக் குறைத்திட வேண்டும்!

நல்லதே சொல்லி, நல்லதே செய்தால்
நல்லதே அமையும் வாழ்வும் நலமாய்!

நாளெல்லாம் தொடரும் நன்மைகள் படரும்!
நாளை வாழ்வும் மனம்போல் உயருமே!

3

## தாயின் அன்பு

பெட்டைக் கோழி முட்டையிட்ட
பெருமையில் பலநாள் அடைகாத்து,
முட்டைகள் உடைக்கக் குஞ்சுகளாய்
வந்தே பிறந்தன பிஞ்சுகளாய்!

பஞ்சால் உடலும் எடுத்ததுபோல்
பளபள என்னும் நிறங்களிலே,
குஞ்சுகள் நடக்கும் அழகாக.
கோழியும் தொடரும் நிழலாக!

அசைந்தே நடக்கும் குஞ்சொன்று!
அலறித் துடிக்கும் பிஞ்சொன்று!
இசைந்தே பறக்கும் இன்னொன்று!
இடையில் குதிக்கும் மற்றொன்று!

தாயின் சிறகில் தவமிருக்கும்.
தணல்போல் அணைப்பில் சுகமிருக்கும்
வாயில் உணவைப் பிடித்திழுத்து
வம்பால் ஒன்று வழிமறிக்கும்!

எத்தனைக் குஞ்சுகள் இருந்தாலும்
எல்லாம் தாய்க்குப் பிள்ளைகளே!
எத்தனைத் துன்பம் வந்தாலும்
எல்லாம் தாய்க்கு இன்பங்களே!

ஓடிப் போகும் குஞ்சுகளை
ஓடா தேனத் தாய்தடுத்து,
நாடித் தேடி இரைகொடுத்து
நன்றாய் வளர்க்கும் தாய்க்கோழி!

குஞ்சுகள் இடையே ஒருகுஞ்சு
குறும்பும் கர்வமும் தான்கொண்டு,
அஞ்சுவ தில்லை; தாய்ச்சொல்லை
அணுவள வேனும் மதிப்பதில்லை!

சிறகால் குஞ்சுகள் தனை அணைத்து
சீர்பெறும் அலகால் முகம்தடவி,
அறிவுரை சொல்லும் தாய்க்கோழி!
அன்பினைக் காட்டும் தான்கூவி!

வாழ்க்கை என்பது வானவில்லே!
வாழ்ந்திடும் வரைதான் அச்சொல்லே!
வாழ்வோம் சிறப்பாய் இருக்கும்வரை!
வளர்வோம் செழிப்பாய் சிரிக்கும்வரை!

அன்னையின் சொல்லைக் கேட்கும்வரை
ஆபத்து உங்களை அணுகாது!
என்னை விட்டே பிரியாதிர்.
இன்னல் தனையே அடையாதீர்!

தாயின் பேச்சைக் கேட்டுவிட்டு
தலைகளை ஆட்டின குஞ்சுகளும்!
வாயால் தரையைக் கீறிவிட்டு
மறுத்தே கூறும் ஒருகுஞ்சு!

"கேழ்வர கில்நெய் வடிவதென்றால்
கேட்பவர் மதிஎங்கு போயிற்றோ!
சூழும் துன்பம் வருவதென்றால்
சும்மா நானும் இருப்பேனோ?

பசும்பால் சிவப்பு எனச்சொன்னால்
பாரில் கேட்பவர் பொறுப்பாரோ?
நிசம்போல் பொய்யைத் தாய்சொன்னால்
நல்லவர் கேட்டே சிரிப்பாரே!

வெளியில் ஓடி விளையாடி
வீதியில் அலைந்தே இரைதேடி,
களிப்பாய் வாழ்ந்திடத் தடைஏனோ?
காவல் செய்வதும் முறைதானோ?"

என்றே எதிர்த்தே பேசிவிட்டு,
ஏளன மாகவே நடந்ததுவே!
"இன்றே நானும் வளர்ந்துவிட்டேன்!
எதிர்ப்பவர் யார்? எனப் போனதுவே!

அங்கும் இங்கும் அலைபாயும்
ஆணவ மாகவே இரைதேடும்!
பொங்கும் கர்வம் கண்களிலே
பூத்துக் குலுங்கிடக் குரல்கொடுக்கும்.

தாயின் சொல்லை மதிக்காத
தன்மையை பெரிதாய் நினைத்திருக்கும்.
வாயும் வயிறும் நமக்குத்தான்!
வாழ்வுக்கு தாயின் துணைஎதற்கு?

மற்ற குஞ்சுகள் மனதினையும்
மாற்றிட முயன்றது அக்குஞ்சு.
கற்றுக் கொடுத்திட முயன்றதுவே!
காதும் கொடுத்தவை கேட்கவில்லை!

தனியே திரிந்தது அக்குஞ்சு.
தாவிப் பறந்தது தானென்று
இனிநான் யாருக்கும் அடிமையில்லை
என்றே துணிந்தது நடந்ததுவே!

பலநாள் இதனைப் பார்த்துவந்த
பருந்தும் காலம் பார்த்ததுவே!
பலகா ரம்போல் உண்டிடவே
பறந்தும் பதுங்கியும் இருந்ததுவே!

குஞ்சும் வருவதைக் கண்டவுடன்
குறியாய் இருந்த கருடனுமே
கொஞ்சம் கூடத் தவறாமல்
கால்களில் கவ்விப் பறந்ததுவே!

யாரோ அறைந்தது போல்இருக்க,
யாரோ குரல்வளை தான்நெறிக்க
யாரோ தன்னை உயிர்எடுக்க
என்றே குஞ்சும் அலறியதே!

சத்தம் கேட்டத் தாய்க்கோழி
சமர்த்தாய் தானும் உடன்பறந்து,
கொத்திப் பருந்தைத் தாக்கிடவே,
குஞ்சைப் போட்டுப் பறந்ததுவே!

கீழே விழுந்த அக்குஞ்சும்
கிழம்போல் நடுங்கிக் கிடந்ததுவே!
வாழ்வைத் தந்த தாய்க்கோழி
வந்தே சிறகால் அணைத்ததுவே!

காயம் அதிகம் ஆனாலும்
கண்கள் தப்பின அதிசயமே!
ஞாயம் பேசிட நீதியில்லை.
நல்லது எதுவென உணர்ந்ததுவே!

தாயின் பேச்சைத் தடுத்தேன் நான்!
தண்டனை அடைந்தேன் பார்த்தீரோ!
தாயைப் போல் ஒருதெய்வமில்லை!
தாய் சொல் கேட்டால்துன்பமில்லை!

தாயின் அன்பு தனிஅன்பு.
தன்னலம் இல்லா தனிஅன்பு.
பாயும் துயர்களைப் போக்கிவிட்டு
பண்பாய் காக்கும் குலதெய்வம்!

என்றே குஞ்சும் கூறியது.
எல்லோர் முன்னிலும் பாடியது!
நன்றாய் வாழ்வேன் எனப் பேசி
நல்லஜூர் குஞ்சாய் மாறியது!

அறிவும் அன்பும் தரும் கீதம்!
அன்னையின் சொல்லே அருள் வேதம்!
உறவை வளர்ப்போம் உடல் காப்போம்!
உண்மை உணர்வோம் தினம் சிரிப்போம்.

# 4

## பந்தாட்டம்

---

வீட்டுக்கு உள்ளே விளையாட்டா!
வெளியே போய்நீ விளையாடு!
ஆட்டம் போட்டத் தருமனையே
அம்மா வெளியே விரட்டிவிட்டாள்!

சரிமா என்று சொல்லிவிட்டு
தந்தை கொடுத்த புதுப்பந்தை,
பொறுமை இன்றி எடுத்துக்கொண்டு
போனான் தருமன் தோட்டத்திற்கு!

தருமன் உதைத்தான் பந்தோட
தாவி குதித்தான் அதன்கூட!
அருமை அருமை என ஆடி
ஆட்டம் போட்டான் சுகம்தேடி!

எகிறிக் குதித்த புதுப்பந்து
எங்கோ விழுந்து மறைந்ததுவே!
பதறிப் போனன் தருமனுமே!
பார்த்தான் அலைந்தான் கிடைக்கவில்லை!

புதராய் புற்கள் நின்றதனால்
போனதே பந்தும் காணாமல்!
இதமாய் புற்களைக் கேட்டுவிட்டால்
எங்கே என்று தெரிந்துவிடும்!

தருமன் போனான் மெதுவாக!
தகவல் கேட்டான் இதமாக!

தருமன்:

புல்லே புல்லே ஏன் வளர்ந்தாய்
புதர் போல் இங்கே ஏன் நிறைந்தாய்!
சொல்லேன் சரியா ஏன் உயர்ந்தாய்!
சொந்தப் பந்தை இழந்தேனே!

புல்:

மனம் போல் மேயும் வெள்ளைப்பசு
தினமும் வரும் இன்று வரவில்லை!
மனம் போல் வளர்ந்தேன் அதிசயமோ
மாற்றம் ஏதும் இல்லை இல்லை.

வெள்ளைப் பசு ஏன் வரவில்லை!
வேண்டிய மட்டும் மேயவில்லை.
உள்ளதை போய்நீ அறிந்து வந்தால்
உனக்குப் பந்தையும் நான் தருவேன்!

வெள்ளைப் பசுவைத் தேடிக் கொண்டு
விரைவாய் சொன்றான் தருமனுமே!
தொல்லை தந்தஅப் பசுவினையும்
தூரத்தில் கண்டதும் ஓடி வந்தான்.

தருமன் :

வெள்ளைப் பசுவே மறைக்காதே!
வேகமாய் கொம்பை அசைக்காதே!
வருவதை ஏனோ நிறுத்திவிட்டாய்;
வராமல் புல்லை வளரவிட்டாய்!

காரணம் சொன்னால் புரிந்து கொள்வேன்
காரியம் செய்ய முயன்றிடுவேன்.

பசு :

தருமா பொறுப்பாய்! மேய்க்க வரும்
தறுதலைச் சிறுவன் ஏய்த்துவிட்டான்!
கூட்டிச் செல்வதை நிறுத்திவிட்டான்.
ஓட்டிப் பட்டியில் அடைத்துவிட்டான்.

என்னால் என்ன செய்ய முடியும்!
இரக்கப் படுகிறேன் உன் மேலே!
அவனைக் கேட்டால் உண்மை வரும்.
கவலைகள் தீரும் நன்மை வரும்!

மாடுகள் மேய்க்கும் மணிசாமி
மடையன் எங்கே போனானோ!
பாடுகள் படுத்தி வைப்பவனைப்
பார்த்தால் கேள்வியும் கேட்பாயே?

**தருமன்:**

மாட்டை மேய்ப்பது உன் வேலை
மறந்தே செய்கிறாய் வீண் வேலை!
பூட்டை உடைத்துத் திறந்து விடு
போயே பசுவை மேயவிடு!

**மணிசாமி:**

அதற்கும் காரணம் இல்லாமலா
இருக்கும்! சொல்வேன் கேட்டிடுவாய்!
அசையும் பொக்கை வாய்க்கிழவி
அன்னம் தருவாள் காலையிலே!

இன்றே பட்டினி போட்டுவிட்டாள்!
ஏனென்று கேட்டேன் திட்டிவிட்டாள்!
செய்தது நானும் சரிதானே!
பொய் எனில் பாட்டியை கேளண்ணே!

(தருமன் பாட்டியிடம் போகிறான்)

**தருமன்:**

பாட்டி இதுவும் சரிதானோ!
பட்டினி போட்டது முறைதானோ!
எத்தனை கோபம் இருந்தாலும்
இப்படி செய்வது குணம்தானோ!

**பாட்டி:**

தருமா தருமா இதைக் கேளேன்.
தர்மம் எதுவென நீ சொல்லேன்!
வீட்டில் குழந்தை வளர்மதியும்
வளர்வது உனக்குத் தெரியாதோ!

அன்புப் பாப்பா அருள் பாப்பா!
அழகுப் பாப்பா நீயறிவாய்!
இன்று செய்திட்ட குழப்பத்தினால்.
எல்லாம் நடந்தது வருத்தத்தினால்,

சாதம் கேட்டாள் பசிக்குதென்று;
தந்தேன் நானும் புசியென்று!
கையில் வாங்கிப் போட்டுவிட்டாள்.
காரணம் கேட்டேன் அழுகின்றாள்.

பானை சாதம் கொட்டியதே!
பாழாய் போனது வாட்டியதே!
அவளைக் கேட்டேன் அழுகின்றாள்!
அவளால் நானும் அழுகின்றேன்!

ஏழை நான்தான் என்செய்வேன்!
என்னைப் போல்அவள் துடிக்கின்றாள்!
ஏனோ அழுகிறாள் போய்கேளேன்.
இருக்குது வேலைகள் போய் வருவேன்!

(தருமன் பாப்பாவிடம் கேட்கிறான்)

தருமன்

பாப்பா பாப்பா வந்திடுவாய்!
பாழும் அழுகையை விட்டிடுவாய்!
கொட்டிய சாதம் பார்த்தாயோ!
பட்டினி போட்டதை அறிவாயோ!

பாப்பா ;

என்னால் தானே தொல்லைகளும்
இல்லை அண்ணே! இதைக்கேளும்!
கையில் பானையைப் பிடித்திருந்தேன்
கவன மாகவே வைத்திருந்தேன்.

கைமேல் ஏறிய எறும்பொன்று
கடித்தது என்னை வெடுக்கென்று!
பொட்டென நானும் போட்டுவிட்டேன்
போனது வீண்என அறிந்துவிட்டேன்!

என்மேல் தவறுகள் இல்லையண்ணே!
எறும்பால் விளைந்த வினையண்ணே!
மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேன்
மெதுவாய் போகும் எறும்பைக்கேள்!

**தருமன்**

ஓடி ஒளிந்திடும் சிற்றெறும்பே!
உண்மை எனக்கு நீ விளம்பே!
நாடிக் கடித்தது பெருங்குறும்பே!
நாசம் ஆனதே சாதங்களே!

வாடிப் போனதே வண்ணமுகம்!
வதங்கிப் போனதே பிஞ்சு மனம்!
மௌன மானது சிற்றெறும்பு!
மன்னிப்புக் கேட்டது மனம் திரும்பி

மேலும் தருமன் பேசுகிறான்!
மேலாய் நீதிகள் கூறுகிறான்!
மனிதச் சோலையில் பூத்தமலர்!
மழலைகள் சிந்தும் தெய்வமலர்!

புனிதக் குழந்தையைத் தீண்டாதே!
பொறுமையை இழக்கத் தூண்டாதே.
தெய்வத் திடம்நாம் பழகுதல் போல்
தெரிந்தே பழகிட வேண்டாமோ!

செய்வதை நன்மையாய் செய்துவிடு!
சிந்தை குளிரும் புரிந்துவிடு!
எறும்பும் தன் பிழை உணர்ந்ததடா!
கரும்பாய் காரியம் முடிந்ததடா!

**பந்தாட்டம்**

பாப்பா மலர்போல் சிரித்தாளே!
பாட்டி பொக்கைவாய் விரித்தாளே!
பசியும் ஆறினான் மணிசாமி
பசுவை மேய்த்திட நடந்தானே!

புல்லை மேய்ந்தது வெள்ளைப் பசு!
புதரும் மறைந்தது நிறைவாக.
பந்தும் தெரிந்தது தெளிவாக.
பாய்ந்தான் தருமன் எடுத்திடவே!

துள்ளித் துள்ளி ஆடுகிறான்.
துய்மை மனம்பெற ஓடுகிறான்!
உள்ளம் களித்தே ஆடுகிறான்!
உலகை மறந்தே ஆடுகிறான்!

# கங்கைக் கரையோரம்

## சிறு விளக்கம்

இதிகாச காவியமான இராமாயணத்திலிருந்து ஒரு காட்சியை இங்கே நாட்டிய நாடகமாக ஆக்கித் தந்திருக்கிறேன்.

கைகேயி கேட்ட வரத்தின்படி, தசரதன் தந்த ஆணையின் வழி, இராமன் கானகத்திற்குச் செல்வதில் தொடங்கி, குகனை சந்தித்து உரையாடுவது; பரதனை எதிர் நோக்கி ஏற்றுக் கொள்வது போன்ற நிகழ்ச்சிகளைத் தொகுத்து, இந்நாடகம் உருவாக்கப் பட்டிருக்கிறது.

பலமுறை நாட்டிய நாடகமாக அரங்கேறி இருக்கும் இந்நிகழ்ச்சிக்குரிய பாடல்களுக்கு உரிய இராகங்களை தயாரிப்பில் ஈடுபடுபவர்களே அமைத்துக் கொள்ளலாம்.

ஒவ்வொரு கதைமாந்தரும் உரையாடுவது போன்ற அமைப்பில்தான் இக்கதைப்பாடல் அமைக்கப்பட்டிருக்கிறது.

ஆகவே, இதனை அரங்கேற்றும் நேயர்கள் இதில் இன்னும் செழுமை சேர்க்க வேண்டும் என்று விரும்பினால் தங்கள் கருத்துக்களை எழுதினால், ஏற்று இணைத்து வெளியிட விரும்புகிறேன்.

உங்கள் ஒத்துழைப்பை எதிர்பார்க்கிறேன்.

நவன்

## கதை மாந்தர்கள்

| | | |
|---|---|---|
| இராமன் | ... | தசரதன் மைந்தன் |
| இலக்குவன் | ... | இராமனின் சகோதரன் |
| பரதன் | ... | ,, |
| சத்துருக்கனன் | ... | ,, |
| சுமந்திரன் | ... | தசரதன் அமைச்சர் |
| குகன் | ... | கங்கைக்கரை அதிபன். |
| படகோட்டிகள் | ... | ,, |
| சீதை | ... | இராமனின் மனைவி. |

# 5

## கங்கைக் கரையோரம்

---

நாடறிந்த புண்யகதை இராமாயணம்!
ஏடறிந்த இனிமையெலாம் இராமாயணம்!
வீடறிந்த சுகமெல்லாம் இராமாயணம்!
வீரமொடு பக்திதரும் இராமாயணம்!

தாயின் சொல்கேட்ட
தந்தையின் சொல்கேட்டு
நாயகன் ராமனும்
நடந்தான் நாடுவிட்டு.
கணவன் இருக்குமிடம்
கைலாசம் என்றதனுல்
துணைவன் நிழல்போல
தொடர்ந்தாள் சீதையும்.

அண்ணன் திருவடிக்கு
ஆயிரம் பணிசெய்ய
சின்னவன் இலக்குவனும்
சேர்ந்தான் அவரோடு.
அழுதிடும் மக்களுக்கு
ஆறுதல் பலகூறி
தொழுதிடும் கைகளுடன்
கங்கைகரை சேர்ந்தார்.

கங்கைக்கரை அதிபன்
குகன்எனும் பெயராளன்
தங்கக்குணம் கொண்டோன்
ராகவனைக் கண்டானே

குகன்

மன்னனே! வருக!
மாதவா வருக!
மன்னனே வருக!
மழைதரு கருமுகில்
வண்ணனே வருக!
மாநிலம் கொண்டாடும்
கண்ணனே வருக!
கருணையின் வடிவமே!

மண்ணில் நடைபோடும்
மாயவா வருக!
கண்பெற்ற பயனெல்லாம்
கண்டேன் ராகவா!
பொன்பெற்ற ஏழைபோல்
கொண்டேன் மாதவா!
அன்னைஎழில் சீதையுடன்
அருள்வரம் தந்தவா!
என்னையும் ஆட்கொள்ள
இவ்விடம் வந்தவா!

கங்கைநதி கடப்போம்!
கடந்தே வழி நடப்போம்!
அங்கோர் ஆஸ்ரமம்
அமைத்தே வாழ்ந்திருப்போம்.
வல்லமைகொண்டவா!
வாழ்வை உனக்களித்தேன்.
அல்லும் பகலும் உன்
அருகில்நான் கழிப்பேன்!

ராமன்

எழுந்திரு தம்பி உன்
இதயம் புரிந்தது!

பழம் போல் கனிந்தஉன்
பண்பும் தெரிந்தது.
என்னுடன் பிறந்தவர்
மூவர்கள் அல்லர்.
இன்றுடன் நீ சேர்ந்தாய்.
ஐவர்கள் ஆனோம்!

இன்றுமுதல் நீநம்பி.
இவளும் உனக்கண்ணி!
இலக்குவனும் ஆனான்
இனியவனோர் இளநம்பி!
தோழா புறப்படு
சேர்வோம் மறுகரையை!
வாழி நீ பல்லாண்டு.
பெறுவாய் புகழ்நிலையை.

**அயோத்தி நகரில்**

அயோத்தி வந்தடைந்த
இளையவன் பரதனும்
துயரமிகு செய்தி கேட்டுத்
துடித்தனன், துவண்டனன்!
அண்ணன் அரசுரிமை
தனக்கெனச் சொன்னதும்
மின்னல் இடிபோல
எழுந்தனன்......அலறினன்

பரதன்

அண்ணு! இதுகொடுமை!
அன்னையின் - பெருமடமை!
அண்ணு! உன்பொறுமை!
ஆள்வதோ என்கடமை!
உனக்கா கானகம்?
எனக்கா தாயகம்?
நினைக்கவே முடியாத
நிலையிது பயங்கரம்!

(தம்பி சத்துருக்கனனைப் பார்த்து)

தம்பி நீஎழுவாய்!
தாமதம் வேண்டாமே!
களம்புகும் படைகளைக்
கடலெனத் திரட்டு!
கண்இமைக்கும் நேரத்தில்
அண்ணன் - முகம்காண
முன்னே நடைபோடு!
மின்னலின் விரைவோடு.

படை நடந்தது

கத்தும் கடல்போல்
நடந்தது பெரும்படை!
முத்துச் சரம்போல்
அசைந்நது எழிற்கொடி!

அலையில் கலம்போல
இருந்தது அந்நடை.
மலையில் வழிபோல
தெரிந்தது அப்படை.

கங்கைக் கரையடைந்து,
பரதன்படை யெல்லாம்
எங்கும் பரவுவதை
கண்டான் குகனுமே.

குகன்

யாரிங்கு வருவது?
எவர் நம்மைப் பொருவது?
வீரம் எவர்க்குண்டு?
பார்ப்போம் அதை இன்று!
மன்னவர் என்றாலே
நம் அம்பு பாயாதோ?
மண்ணில் கொடிபோல
அவருடல் சாயாதோ?
படகும் கிடைக்குமோ?
பயணம் நடக்குமோ?
கெடுத்திட இவண் வந்த
படையும்பிழைக்குமோ?

நாட்டைக் கொடுத்தவன்
நன்றியை நினையாமல்
காட்டிலும் படைகொண்டு
கலகம் செய்கிறான்.
ஏட்டிலும் இதுபோல
கொடுமை இருந்ததில்லை.
ஓட்டுவேன் அவர்படையை!
நாட்டுவேன் ஜெயக் கொடியை!

படகினைச் செலுத்தும்
பாரத வீரர்களே!
படைகளைத் திரட்டுங்கள்.
பகைவரை விரட்டுங்கள்!
முரசினைக் கொட்டுங்கள்!
நம்திறன் காட்டுங்கள்!
வரிசையில் செல்லுங்கள்.
வெற்றியைச் - சொல்லுங்கள்

**சுமந்திரன் பரதனிடம் பேசுகிறான்**

சிந்தையில் உயர்ந்தவன்
தந்திரம் அறிந்தவன்.
மந்திரி சுமந்திரன்
குகனின் புகழ்சொல்வான்!

ராமனின் இளவலே!
இதுகேள் என்றவன்
கோமகன் குகனின்
நலத்தினைக் கூறுவான்!

சுமந்திரன்

கானகம் வந்தவரைக்
கனிவுடன் வரவேற்று,
தானொரு அடிமைபோல்
பணிவுடன் சுகம்காத்து,
வானக வாழ்வெனவே
ராமனின் நலம்சேர்த்து,
வாழ்வின் துணையானான்
அன்புடன் கைகோர்த்து!

ராமனுக்குத் துணையானான்.
இரவும் பகலுமே!
ராமனின் நினைவானான்.
நினைவில் தோழனாய்,
கடமையில் கோயிலாய்,
கருணையின் வாயிலாய்
தொடர்ந்தான் தலைவனை!
காத்தான் ராமனை

(பரதனும் குகனும் சந்தித்தல்)

இரதம்போல் அசைந்தானே
கைகேயி மகனுமே!
பரதனின் தவக்கோலம்
பார்த்தான் குகனுமே!
படையொடு வந்தது
போரிட அல்லவே!
விடைதனில் மகிழ்ந்தனன்,
வெட்கத்தால் சிவந்தனன்.

**பரதன்**

தசரதன் மைந்தனாம்
தனிப்புகழ் ராமனுக்கு
வசதிகள் பலசெய்து
வழித்துணை தந்தவன்
அன்பின் முகம்காண்பேன்
அவனடிமலர் காண்பேன்
துன்பம் துடைத்திடும்
வழிஒன்றை நான்காண்பேன்

திறமையில் நின்றிடும்
குகனும் முன்நடந்தான்
பெருமையில் குன்றேறும்
பரதனும் முன்நடந்தான்

உடன்பிறந் தோனே
ஒருமொழி கூறிடு!
அன்பின் தெய்வம்
ராம னெங்கே?
உறைந்தது எவ்விடம்?
உண்டது எவ்விடம்?
துயின்றது எவ்விடம்!
திகழ்ந்தது எவ்விடம்?
காலடித் தாமரை
மலர்ந்தது எவ்விடம்?
காலத்தின் நாயகன்
வாழ்ந்தது எவ்விடம்?
நலமா? நலந்தரும்
அண்ணியும் சுகமா?
வளமா? வாழ்வில்
விளைந்தது சுகமா?
உடன்பிறந்தோனே?
ஒருமொழி கூறிடு!

எனக்கிந்த அரசுரிமை
ஏனோ? ஏனோ?
தினந்தினம் பழியொடு
வாழ்ந்திடத் தானோ?

துயரத்தின் சுமையுடன்
ஆண்டிடுவேனோ?
உயர்ந்தவன் இராமனை
அழைத்திடுவேனே!

வரந்தனை வாங்கவே,
அண்ணனை அழைக்கவே
சிரம்மேல் கரம்குவித்தே
சரண் புகுந்தேனே!

குகன்

என்னுயிர் இராமனின்
இளவன் பரதனும்,
மன்னுயிர் இகழ்ந்திடப்
பிழைகள் இழைப்பரோ?
ஆயிரம் ராமர்கள்
உனக்கீடாவதுண்டோ?
காவியம் உனைப்புகழும்
உன்னருந் தியாகத்தை

செல்வோம் சோதரா!
இருவரும் ஒன்றுவோம்!
சொல்வோம் நீதியை!
செயலில் குன்றுவோம்!

உண்மை மறையாது!
உனைப்போல் இருக்கும் வரை.
நன்மை குறையாது
நின்செயல் நினைக்கும் வரை
செல்வோம் சோதரா
சொல்வோம் நீதியை!

(இருவரும் செல்கின்றனர்).

வாழ்கவே வாழ்வுதரும்
இராமனின் திருநாமம்!
வாழ்கவே வழிகாட்டும்
பரதனின்-பெருந்தியாகம்!
வாழ்கவே குகன்எனும்
வேடனின் அன்பு உள்ளம்!
சூழ்கவே இதயமெலாம்
பக்தியெனும் இன்பவெள்ளம்

— திரை —

# 6

## காவிரித் தாயே!

---

குடகுமலை உச்சியிலே
குடியிருக்கும் சையமலை!
சையமலை மையத்திலே
சாய்ந்திருக்கும் நெல்லிமரம்!
நெல்லிமர அடியினிலே
நிறைந்திருக்கும் பேரூற்று!
பேரூற்று பொங்கியதே!
பிறந்தாளே காவிரியும்.

பொங்கிவரும் பேரூற்று
தேங்கியது கடலாய்!
எங்கிருக்கும் மலையெல்லாம்
ஏங்கிவரும் நிழலாய்!
மங்காத அலையோட்டம்
விளையாடும் குளமாய்!
அங்கிருந்து ஆட்சிசெயும்
காவிரியை அழகாய்!

ஐப்பசி மாதத்திலே
சங்கிரமண காலத்திலே,
தெப்பமென நீரிருக்கும்,
திருவிழாவின் சீரிருக்கும்!
பொங்குவண்ண நுரைதாவி
எங்கும்வண்ண மலர்தூவி
சங்குவளை காதோலை
சரிந்தாடும் கருகுமணி,
அள்ளியிட நீரோடும்,
பேரழகுத் தேரோடும்.
கொள்ளையந்த கையழகு
கன்னியரின் மெய்யழகு!

அத்தனையும் தான்சுமந்த
அழகுமகள் காவேரி,
எத்தனையோ வேலையென்ற
எண்ணத்தால் ஓடிடுவாள்!
கத்திவரும் காட்டாறு
கனகம் எனும் சிற்ருறு
மெத்தபாக மண்டலத்தில்
மெதுவாகக் கலந்தாளே!

சிற்ருறு காவிரியும்
சிந்தையும் குளிர்ந்ததனுல்
உற்றதன் உடலளவில்
பெற்ருளே பேரழகு!

பெற்றுளே பேரளவு
பெற்றுளோ தன்னிறைவு!
கற்றவர் மனம்போல
கொண்டாளே பெரும்துணிவு!

காட்டினிலே திரிந்துவிட்டு
கண்ணுறங்கும் மந்தைகள்போல்,
ஓட்டத்தில் கலந்துவிட்ட
ஓரிரண்டு நதிகளுமே
பாறையில் மோதுகின்றுர்,
பாதையில் மாறுகின்றுர்!
சீறலில் மீறுகின்றுர்
வானத்தில் தாவுகின்றுர்.
ஓசைகளை உண்டாக்கி
உள்ளத்தைக் கண்டாக்கி

உள்ளங்களை நிரப்புதல்போல்,
பள்ளங்களைத் நிரபபுகின்றுர்!
வெள்ளத்தால் விளையாடும்
ஜீவநதி காவிரியை
ஊமைபோல் ஓடிவந்து
ஊரெல்லாம் தேபுவந்த
ஏமநதி கலந்திடுவாள்
இன்பத்தால் மலர்ந்திடுவாள்!

காலத்தின் பெருங்கருணை
காவிரிக்கு நிறைந்ததம்மா!
கோலத்தின் அழகையெல்லாம்
தினம்கொண்டு வளர்ந்ததம்மா!
பருவத்தின் பேரழகு
பயணத்தில் மலர்ந்ததம்மா!
உருவத்தில் செழுமைகண்டு
உலகமே வியந்ததம்மா!

கண்டுவந்த மக்களெல்லாம்
கட்டிவிட்டார் ஓர் அணையை!
கொண்டுவந்து தந்துவிட்டார்
கூடிவரும் ஓர் துணையை.

அது- கண்ணம்பாடி அணை
புது - வண்ணம் பாடும் துணை!

கரையிரண்டில் பசுமை யெல்லாம்
கலந்து கொண்டது - அந்தக்
கலப்பினிலே தோட்டமாகக்
காட்சி தந்தது.

குறைவில்லாத கனிகளாக
குவிந்து கிடந்தது- அந்தக்
குவியலிலே வாசனைகள்
கூடி மலர்ந்தது.

ஏலம் கிராம்பு வால் மிளகு- நல்ல
ஏற்ற முள்ள காபித் தேயிலையும்
கோலம் மிகுந்திடும் ஜாதிக்காயும்- தந்த
கொள்ளை மணம் எங்கும் மீறினவே.

கண்ணன் வாழ்ந்து கதைகள்
தந்த பிருந்தாவனம் - அவன்
கண்கள் போல கவர்ச்சி
அந்த பிருந்தாவனம்.
எண்ணம் போல ஏற்றமுள்ள
பிருந்தாவனம் - அங்கு
இருப்பதல்லாம் இன்ப
மொன்றே பிருந்தாவனம்!

தலையசைத்துக் கிளையாட்டும்
பச்சை மரங்கள் - அந்தக்
கிளைகளிலே பலர் பறிக்கும்
இச்சைக் கரங்கள்
கலையழகு கண்ணழகு
கார்த்திகை தீபம் - என்ற
காட்சியுடன் காத்திருக்கும்
பிருந்தாவனம்!

பறவைகளின் இன்னிசைக்குத்
தாளம் போலே - அங்கு
பறந்தாடும் அலைக் கூட்டம்
சலசலப்பாலே
இரவில்லை பகலில்லை என்றும்
சந்தோஷம் - அந்த
உறவினிலே உள்ளம் துள்ளும்.
பிருந்தாவனம்.

பயணம் போகிறாள் காவேரி!
பயணம் போகிறாள் காவேரி!

பயனைக் கொடுக்கவே,
பலனை விளைக்கவே,
உயர் தமிழ் ஏட்டிலே
உள்ள தமிழ் நாட்டிலே (பயணம்)

ஒற்றையடிப் பாதையென
வளைந்து போகிறாள்.
கற்றைக் குழல் மாதிரியாய்
நெளிந்து கொள்கிறாள்.
மட்டையடிப் பந்தாகப்
பாய்ந்து செல்கிறாள்
மாணவிகள் கூட்டம் என
சிரித்துக் கொள்கிறாள்.

திருமுக் கூடலில்
சேர்ந்தனள் ஓர் நதி
பெருமை நிறைந்தவள்
பெயர் கபிலா நதி
மைசூர் மாநிலத்தில்
அவளோ ஜீவநதி
பேசும் பெருமைக்கெலாம்
அவளோ தேவநிதி
காவிரி கபிலையுடன்
கலந்தே சென்றனள்
ஆவலில் அங்குத்தான்
சுவர்ணையும் நின்றனள்

படையுடன் படையொன்று
சேருதல் போலவே
தடைகள் இன்றியே
சேர்ந்தனர் இருவரும்!

தடையும் வந்தது
தடத்தின் மீதிலே....
அடைந்தது பிரிவுதான்....
அறுந்ததும் உறவுதான்,
சிவசமுத் திரம் எனும்
உயர்ந்தஓர் மேடுதான்
சிவனின் தலை போல
நிமிர்ந்த ஓர் நோக்குதான்.

கங்கை சிவன் தலையில்
குதித்தது போலவே
அங்கே மேலேறி
குதித்தனள் காவேரி.
அதுதான் அழகுசிவ
சமுத்திர நீர்வீழ்ச்சி!
நிதமும் குதித்தாடும்
நேரிய கண்காட்சி!

குறுக்கே வந்தது
கொங்குநாடு - அதைக்
கடந்தோ போவது
மேக தாடு.
பூவார் சோலைகள்
மயிலாட - பெரும்
புண்ணிய குயில்களும்
இசைபாட,
காமர் மாலைகள்
அருகசைய - அங்கு
கவினுற நடந்தனள்
காவேரி!

காலத்தை வென்றாள்காவேரி - எழில்
கோலத்தைக் கொண்டாள் காவேரி.

சேலத்தை அடைந்தாள் காவேரி - உயர்
சிறப்பினில் திகழ்ந்தாள் காவேரி

பாதைகள் எல்லாம்
மேடுபள்ளம் - அதில்
பாடு படுவோர்க்கே
தங்க உள்ளம்.
ஆதரவூட்டியே நடந்து
வந்தாள் - அந்தப்
போதையில் பணியைத்
தொடர்ந்து வந்தாள்!

தள்ளி நடந்தவளை,
துள்ளித் தொடர்ந்தவளை
அள்ளி அணைத்திடவே
அணைகளிட்டார் - அவள்
ஆனந்த ஓய்வுக்காக
மனைகளிட்டார்.
மேட்டில் பெரிய அணை
மேட்டூர் அணை - பெரும்
காட்டில் எடுத்து விட்டார்
கல்லாலணை - அங்கே
கவிஞர் தொடுத்துவிட்டார்
சொல்லாலணை.

அணைகள் திறந்ததும்
அணையா ஆர்வத்தில்
இணையிலா பணி செய்ய
எடுத்தனள் உறுதியும்!

சின்னஞ்சிறு சிறுமியாகப்
பயணம் செய்தவள் - பலர்
சிந்தனைக்கே விருந்தாகிக்
கருத்தைக் கொய்தவள்!
அன்னமெனத் தான் நடந்தே
அடங்கிப் போகிறாள் - தன்
அனுபவத்தால் தாயாகி
வழியைக் காண்கிறாள்!
நொய்யல் பவானியுடன்
அமராவதி - வந்து
நிறைவுடனே கலந்து கொள்ள
தாய்க் காவிரி,
திருச்சியில் நுழைந்தாளே
தேன்காவிரி - அவள்
திருப்பெயரும் கொண்டாளே
அகண்ட காவிரி,

சீரங்கத்தில் செய்யாறு வந்து
சேர்ந்தாடும் - சுவை
நீராடும் கரும்புவாழை
கண்டு சாய்ந்தாடும்!

சீரோடு புவி தனையே
காத்தவள் இன்று - புது
சிறு நதியை பிள்ளையென
அனுப்பினாள் இன்று!
காவிரி கொள்ளிடமாய்
இருநதி என்று - இனம்
காட்சி தரும் மாட்சியினால்
காலத்தை வென்று!

கரிகாலன் கட்டிவைத்த
கல்லணை - தமிழ்
காவலனின் கைவண்ணம்
நல்லணை.
உரிமையுடன் காவிரியை
தேக்கிவைக்கும் - நஞ்சை
உலகத்தையே நீர் கொடுத்து
வாழவைக்கும்!

தஞ்சையிலே கொஞ்சுகிறாள்
கிளையாறாய் - சோறு
தந்துவிடும் வயல்களுடன்
வாய்க்காலாய்!
மிஞ்சுகின்ற பேருழைப்பின்
வழிகளாய்! - இவள்
வாழ்கின்றாள் தமிழினத்தின்
விழிகளாய்!

மலையில் பிறந்தவள்,
வழியில் சிறந்தவள்,
கலைகள் வளர்த்தவள்
கவிதையில் தழைத்தவள்
காரிவித் தாயவள்
பூவிரித் தாளவள்!
காவியம் பாடுவோம்.
களிப்பினில் ஆடுவோம்.
வாழ்க நதி அன்னை
வாழ்க வாழ்கவே!
சூழ்க நிதி எல்லாம்
சூழ்க சூழ்கவே!!

# எஸ்.நவராஜ் செல்லையா. M.A M.P Ed

## எழுதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| ஒலிம்பிக் பந்தயத்தின் கதை<br>(மத்திய அரசு பரிசு பெற்ற நூல்) | 3 | 0 |
| விளையாட்டுக்களின் கதைகள்<br>(மத்திய அரசு பரிசு பெற்ற நூல்) | 15 | 0 |
| விளையாட்டுக்களின் வழி முறைகளும் வரலாறும் | 11 | |
| கிரிக்கெட் ஆட்டத்தின் கதை | 4 | 5 |
| விளையாட்டுகளுக்குப் பெயர் வந்தது எப்படி? | 3 | 2 |
| விளையாட்டு உலகில் வீரக்கதைகள் | 3 | 2 |
| வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள் | 3 | 0 |
| விளையாட்டுக்களின் விதிகள் | 14 | 0 |
| கால் பந்தாட்டம் | 4 | 0 |
| கைப் பந்தாட்டம் | 4 | 0 |
| கூடைப் பந்தாட்டம் | 4 | 0 |
| வளைகோல் பந்தாட்டம் | 4 | 0 |
| கிரிக்கெட் ஆட்டத்தில் கேள்வி பதில் | 4 | 0 |
| பூப்பந்தாட்டம் | 5 | 0 |
| மென் பந்தாட்டம் | 6 | 0 |
| வளையப்பந்தாட்டம் | 2 | |
| கோகோ ஆட்டம் | 4 | |
| சடுகுடு ஆட்டம் | 7 | |
| கேரம் விளையாடுவது எப்படி? | 4 | |
| சதுரங்கம் விளையாடுவது எப்படி? | 4 | |
| நீங்களும் ஒலிம்பிக் வீரராகலாம்? | 6 | |
| ஒரு நூறு சிறு விளையாட்டுக்கள் | 5 | |
| கூடி விளையாடும் குழு விளையாட்டுக்கள் | 4 | |
| விளையாட்டு விருந்து | 5 | |
| விளையாட்டு விழா நடத்துவது எப்படி? | [illegible] | |
| விளையாட்டுக்களில் விநோதங்கள் | 4 | |

Wrapper Printed by : Grace Printers, Madras-33